[24th March 1961

SRI K. B. S. MANI : சர்க்காரால் கொடுக்கப்படுகிற நிலங்களை சிலவிடங்களில் பக்கத்து நிலத்தின் சொந்தக்காரர்களான மிராசுதார்கள் அவைகளை மாற்றுப் பெயர்களில் தாங்களே ஆக்ரமித்துத் தங்களுக்கு சாதகமாக்கி தங்கள் நிலத்தோடு சேர்த்துக்கொண்டு வருவது சர்க்காருக்கு தெரியுமா ? அப்படித் தெரிந்தால் என்ன நடவடிக்கைகள் எடுக்க முடிவு செய்யப்பட்டிருக்கிறது.

THE HON SRI M. A. MANICKAVELU : எப்படி எப்படி, எந் தெந்த இடங்களில் இப்படி சம்பவம் நடக்கிறது என்று தெரிந்தால் வேண்டிய நடவடிக்கைகள் எடுக்கப்படும்.

SRI M. K. SOMASUNDARAM : நிலமற்றவர்களுக்குக் கொடுக்கக் கூடிய நிலத்தில் அவர்கள் பயிரிடுகிறார்களா, இல்லை சும்மா போட்டிருக் கிறார்களா ? சும்மா போட்டிருந்தால் அவர்கள்மேல் என்ன நடவடிக் கைகள் எடுக்க உத்தேசம் ?

THE HON SRI M. A. MANICKAVELU : நிலம் கொடுக்கிற விதி பிரகாரம், மூன்று வருடங்களுக்கு உள்ளாக சாகுபடி செய்யவேண்டும், இல்லையென்றால் நிலத்தைத் திருப்பி எடுத்துக் கொள்வது என்பது விதி.

SRI V. K. KOTHANDARAMAN : வால்யூபிள், நான்-வால்யூபிள் என்ற ஒரு நிர்ணயிப்பு இப்பொழுதேயிருக்கிறதா ? அல்லது அந்தந்த நிலத்தை வால்யூபிள் என்று சொல்லக்கூடிய நிலையில் அந்தந்த நிலத் திற்கு தகுந்தாற்போல் நிர்ணயிக்கப்படுகிறதா ?

THE HON SRI M. A. MANICKAVELU : இப்பொழுதே இருக் கிறது. நீர்ப்பாசன வசதி இல்லையென்றால், இல்லை.

*Electric lights (Utharakosa Mangai)*

* 1056 *Q.*—SRI K. VINAYAKAM : Will the Hon. the Minister for Electricity be pleased to state whether any request was made by the panchayat board of "Utharakosa Mangai" of Ramanathapuram district for the provision of electric lights in the streets?

THE HON. SRI V. RAMAIAH : Yes, Sir.

SRI K. VINAYAKAM : May I know the stage at which the proposition stands and when the Panchayat would get street lights?

THE HON. SRI V. RAMAIAH : The work will be taken up during the course of the next year.

SRI K. VINAYAKAM : What was the estimated amount that was demanded from this Panchayat Board and did the Panchayat tender that amount?

THE HON. SRI V. RAMAIAH : A scheme has been prepared and it is a feasible scheme and that is why I said that the work will be taken up during the next year.

*Land ceiling (survey of lands)*

* 1057 *Q.*—SRI S. M. ANNAMALAI : கனம் ரெவின்யூ அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) நிலத்திற்கு உச்சவரம்பு கட்டிய பிறகு எவ்வளவு நிலம் உபரி யாகக் கிடைக்குமென்பதை சர்வே செய்ய உத்தேசம் உண்டா ?

(இ) அப்படியானால் அதன் விவரமென்ன ?